# அபிநய சுந்தரி வெள்ளாயி





மத்தளம் முழங்க, விழை யாழும், குழலும் இசைந்து ஒலிக்க
சங்கு நாதம் எழுப்ப, கலிர், கலீர் என சலங்கை ஒலிக்க,
ஆட வந்த அழகு மங்கை, இரு கரம் குவித்து, தலை தாழ்த்தி
அரங்கனைத் துதித்து ஆடிய அபிநய சுந்தரியோ அழகில் ரம்பை

மானோ, மயிலோ, மடப்பிடியோ, மழலைக் குயிலோ,
ஒளிர்மென் கொடியோ மடந்தை, கயலோ விழிகள்,
வில்லோ புருவங்கள், காரோ குழல், பங்கய முகத்தில் பவளச்
செவ்வாய் , காளையர் இதயத்தில் தீராத காதல் விடாய்

பொட்டு வைத்த வட்ட நிலவு, கொவ்வைச் செவ்வாயில்
புன்னகையோ அரும்பு, மையெழுதிய பூவிழிகளில் மயங்கும்
மதுகரம், கண்டாரை ஈர்க்கும் திருமுகம் , அழகு அபிநயம்
காட்டி அரங்கனைத் தொழுது ஆடிய மங்கையோ சுந்தரம்

பவளம்தான் பரந்தாமன் செவ்வாய் நிறத்தை
சொல்லுமோ? பங்கயமும் அதன் மென்மைக்கு
ஈடாகுமோ? பரிமளமும், மலர் மணமும்
அத்தன் வாய் மணத்தை கூறுமோ?

அமுதும், தேனும், பாலும், சர்க்கரையும், முக்கனியும்
செவ்வாய் முத்தத்தின் இனிமைக்கு நிகராகுமோ? நித்தம்
அரங்கன் இதழ் சுவைக்கும் வெண்சங்கே கேட்கிறேன்,
அவன் வாய் மணமும், முத்தச் சுவையும் எதுவென நீ கூறு





என் கொவ்வை இதழ்களும், பூ இதயமும்
அவன் முத்தமின்றி வாட, கத்தும் கடலேலாய்ச்
சோகம் நெஞ்சில் அலைபாய, செவ்வாய் முகர்ந்து,
தெள்ளமுதம் பருகத் தீரும் என் விரகதாபம்

கண்டுதான் உதயம் கண்ட மலராய் நெஞ்சம் மகிழ்ந்தேன்,
உன் திருவழகை உண்டுதான் உள்ளம் குளிர்ந்தேன், செவ்வாய்
அமுதை உண்ணத்தான் தவமாய்த் தவமிருக்கின்றேன்
கண்ணாளனே என் மேல் இரங்கு என்றே இரந்து ஆடுகிறேன்

பாடி அழைத்தும் கேளாத பாவம்
ஆடிக் களைத்தும் காணாத சோகம்
என் பாவமும், தாளமும், ராகமும் உன்னைச்
சேர்ந்தால் நீங்குமே ரங்கா என் விரகதாபம்





அரிவையின் அபிநயம் அரங்கன் நெஞ்சைத் தொட
பக்தர் விழிகளில் பரவசம், பார்த்த காளையர்
நெஞ்சங்களில் கோதையோ காதலின் மதுரசம்
அபிநய சுந்தரியோ அழகின் பொற்சுரங்கம்

ஶ்ரீரங்கம் கோயிலில் நாளும் பரத நாட்டியத் திருவிழா,
பார்த்தவர் விழிகளிலோ அரங்கனைப் போற்றும்
பக்தி விழா, மங்கையின் நாட்டியம் மங்கலமாக,
அமர்களமான வழிபாடோ அரங்கன் துதிபாடும் விழா

நினைந்து நினைந்து நெஞ்சம் பனியாய் உருக
சீறிப் படமெடுத்தாடும் நச்சரவமாய் படையோடு வரும்
சுல்தானை எண்ணி பூ நெஞ்சம் நடுங்க-அரங்கனே
என் நாதனே நீயே எம் தஞ்சம் சரணடைந்த நெஞ்சம்

உன்னைப் போற்றுவாருக்கும், தூற்றுவாருக்கும்
மாறாத உன் கருணை, பாண்டவருக்குத் துணையிருந்து,
குருஷேத்திரத்தில் காத்து இரட்சித்தபோல் எம்மைக்
காத்து இரட்சிப்பாய் அரங்கனே என் அநாதரட்சகனே

கரிகள் பிளிற, பரிகள் ஆங்காரமாய்க் கனைக்க
போர்ப் பறைகள் முழங்க, பல இலட்சம் வீரர்களோடு
ஶ்ரீரங்கம் நோக்கி படை எடுத்த தில்லி சுல்தான்-வரும் வழியும்
ஊர்களும் பாழாக கொள்ளையிடும் கள்வனாய் அரக்கன்



யானைகளும், குதிரைகளும் பல்லாயிரம், படையினரோ
பல இலட்சம், அணிவகுத்துப் படை செல்ல-அச்சத்தில்
அதிரும் பூமி, வரும் கெடுதி அறியாது, ஆலயத்தில்
ஆடிப்பாடி, தொழுதிட அரங்கநாதனோ சாமி



அல்லாவைத் தவிர வேறு கடவுள் இல்லை என்ற
ஆன்மீகத் தாகம் கொண்ட மஸ்தான், இந்து
ஆலயங்களை சூறையாடி, சங்கநிதியாய், கோயில்
பொன், நவரத்தினங்களைச் கொள்ளையிட்ட சாத்தான்

உள்ளம் குமுற, உரோமம் சிலிர்க்க, அஞ்சனம் கரைய
அழுது சிவந்த விழிகள், திப்பு சுல்தான் வருகிறான்,
அரங்கன் கோயிலை கொள்ளையிட, சேதி கெட்டு
செந்தணலில் விழுந்த புழுவாய் துடித்த மங்கை

பூச்சூடி, புதுப்பட்டு தான்சூடி, கார்குழலுக்கு மலர் சூடி,
வேல்விழிகளுக்கு மைசூடி, மனம் சூட, அழகிய மணவாளனுக்கு
நாளும் மலர் மாலை சூடி மனம் மகிழ, பக்தர் மனம் குளிர
பரதம் ஆடும் மங்கை, சேதி கேட்டு வாடி நின்ற நங்கை




பத்து இலட்சம் படையினரை எதிர்த்துப் போரடிய
பன்னிரண்டாயிரம் வீரர்களுக்கு உயிரோ துச்சம்
அனைவரும் மடிந்திட நடந்த கொடிய யுத்தம்,
அல்லாகு அஃக்பர் என்ற வெற்றிச் சத்தம்




வரும் பகைநோக்கி வலிய தோள் தட்டி
காத்திருந்த மறவர், உயிர் அரங்கனுக்கு
உடல் மண்ணிற்கு என்றே, உயிரை
துச்சமாய் மதித்துப் போராடிய வீரத்தமிழர்

போராடி மாண்டவர், குருதி நீராடி வைகுந்தம்
போனார், பூலோக வைகுந்தத்தில்
கைமைக்கோலம் பூண்ட தாய்க்குலமோ
நாளும் கண்ணீர்த் தவமிருந்தார்

ஊரே சிதையாய் மாறிட, போராடிய
மறவர் நீறானார்-கங்கையாய் குருதி பாய,
கற்பினைக் காக்க மங்கையர்
நெய் வளர்த்த தீயில் நீராடிக் கரையேறினார்



அலையலையாய் பெரும் படை மோதிட, வான் மழைாய்
அம்பு மழை பொழிந்திட, ஈட்டிகள் பாய்ந்திட,
இடியும், மின்னலுமாய் போர்ப்பறை முழங்கிட, வாட்கள்
உரசி தீப்பொறி பறந்திட பெருக்கெடுத்த இரத்த ஆறு




பொங்கும் சுனாமிப் பேரலையாய் சுல்தான் படைகள்
குங்குமம் அழிந்து, மங்கல நாண் அறுந்திட, மதுமலர்
மங்கையர் கார்குழல் நின்று உதிர்ந்திட, எங்கும் கண்ணீர்,
தாய்க்குலம் அழுது புலம்பிட ஆறாய் ஓடிய செந்நீர்

திருவரங்கமோ கொலையரங்கமாக திப்பு சுல்தானின்
அட்டகாசம், கொள்ளையிட்ட செல்வமோ இமயம்
கொலையுண்ட உயிர்களோ சின்மயம்,
ஒப்பாரியும், புலம்பலுமாய் ஊரோ சோகமயம்

அழுது புலம்பியும்-அனந்தசயனன் விழிக்கவில்லை,
பொழுது சாயுமுன் பொற்சிலையோ எனதுடைமை-
என் வல்லமையோ மேன்மை
அல்லாதான் கடவுள் நிரூபணமான உண்மை?

கருவறைச் செல்வங்களைக் கண்டு கள்வன் கண்கள் வியக்க,
பொன்னும் நவமணிகளும், முத்தும், பவளமுமாய் மலையாய்
கொட்டிக் கிடந்த செல்வம், சங்கநிதியா? இல்லை குபேர நிதியா
மனம் துள்ள, அரங்கநாதன் சிலை பொன்னா? கனகமலையா?






கொலையுண்ட உயிர்களோ மலையளவு
கொள்ளையிட்ட செல்வமோ குன்றளவு
திப்பு சுல்தான் மனதில் இரக்கம் கடுகளவு
இருந்திருந்தால், நிகழ்ந்திராத கொடிய நிகழ்வு

ஆவல் கொண்ட மன்னன், சிலையை கொண்டு வாருங்கள்,
அற்புதச் சிலை வடிவத்துள் ஒளிந்திருக்கும் சங்க நிதி,
மனம் நாடி வந்த குபேரநிதி, அழகி வெள்ளாயி மனதிலே
தாங்கொண்ணா வேதனை, ஐயோ!இது என்ன என்ற சோதனை

பொன்னைக் கண்டவனுக்கு அரங்கனைக் காண விழியில்லை
வெளியே காணும் விழிகளுக்கு, தன்னுள் உண்மையைக் காண
மதவெறியே திரையான அவலம், மண், பொன், பெண்
பேரின்பம் என்ற ஆணவ மனமோ ஊனம்

அஞ்சனம் கரைய அழுத விழிகள்
அரங்கனே சரணம் என்ற மனதின் நிலைகள்
பாவம், தாளம், ராகத்தில் ஒப்பாரி நிலைகள்
பரந்தாமனே காப்பாய் என்னும் அழுகை ஒலிகள்






சிலையைப் பெயர்த்தெடுக்க படையினரோடு பெருமல்லர்கள்
உத்தரவிற்குப் பணிந்திட, சலங்கை ஒலியோடு மோகன
சங்கீதம் ஒலித்திட, ஆடுவது பொற்சித்திரமோ? சுல்தான்
என் உள்ளத்தை ஆட்டுவிப்பது சுவனத்து மோகினியோ?

அஞ்சனம் எழுதிய நெடுங்கண் அரங்கனை நோக்க
குங்குமம் சூடிய பிறை நுதலில் முத்தாய் வியர்வை அரும்ப
பங்கயமாய் தன்னை அரங்கன் பாதம் சமர்ப்பித்த மங்கை
பின் கைமலர் கூப்பி மன்னனை வணங்கிய நங்கை

நெய்யணி சூடிய கார் குழலில் மல்லிகைப் பந்தல்,
பிறை நெற்றியிலே தங்கச் சுட்டி, நூலிடையில் மேகலை,
பங்கயப் பாதங்களில் கணீர், கணீர் என ஒலிக்கும் சலங்கை,
தன்னை வருத்தி கவலைப் புயலில் ஆடிய செம்பருத்தி





மையளாவிய சேல்விழிகள் சிவந்திட
நெய்யளாவிய மலர்க் கூந்தல் மலர்கள் உதிர்ந்திட
பங்கய முகத்தில் அரங்கனை அழைக்கும் பாவம்
அழுது சிவந்த விழிகளில் அளவில்லாத சோகம்

அங்கை தளிரும் அடி மலரும் அழகு அபிநயம் காட்ட,
கொடி இடையும், கொவ்வை இதழ்களும் காமன்
மலர்க் கணைகளை வீசக், கணீர் , கணீர் என ஒலிக்கும்
சலங்கை, ஆடும் மங்கையோ அழகின் கங்கை

சுல்தான் மனம் ஆட, நடையிலே அன்னம் கண்டான்,
நடனத்தில் தோகை கண்டான், பாடலில் கோகிலம்
கண்டான், பருவத்தில் மோகனம் கண்டான், காமத்தில்
தள்ளாடியவன், கணைபட்ட மானாய் விழுந்தான்

மல்லரோடு சிற்பிகளும் மயங்கிட,
மன்னன் இட்ட கட்டளை மறந்து
ஆட்டத்தில் இலயித்திட, மனங்கவர ஆடிய
அழகு மங்கை தேவலோகத்து ரம்பை

மை விழிகளில் கயல்கள் ஆட, குவிந்த தளிர் விரல்கள்
வணக்கம் கூற-வளைந்தாடும் பூங்கொடி அழகில்
ஆயிரம் வண்ணப் பூக்கள் கண்டான், வஞ்சியிடம்
மனதை இழந்து இட்ட கட்டளை மறந்தான் மன்னன்





மையேந்தி விழியாட, மலரேந்தி குழலாட,
வளையேந்தி பூங்கரங்கள் ஆட
சலங்கை ஏந்திப் பங்கயப் பாதங்கள் ஆட
உயிர் ஏந்தி பரதம் ஆடிய பருவ மங்கை

அன்பே வா என்றழைத்த மை விழிகள்,
அருகே வா என அபிநயம் பிடித்த தளிர்க் கரங்கள்
அழகனே, மன்னனே, பொன்னல்ல, மணியல்ல,
கொள்ளைப் பொருளுமல்ல பேரழகு, என்
உள்ளத்தை கொள்ளை கொண்டால்
உன் சொந்தம் இந்தத் தேன்நிலவு
சொர்கலோகமே நாம் வாழும் உலகு





காமம் தலைக்கேற, நிதானம் விடை பெற, கொலைஞன்
உள்ளதில் விழித்த ஒரு கலைஞன், ஆடலை ரசித்தவன்,
மோகத்தால் சிவந்த விழியாள் அழகைச் சுவைத்தவன்
அபிநய சுந்தரியைச் சுவைக்க ஆசை கொண்ட காமுகன்

பேரழகு கண்களை மறைக்க, ஆடலுடன் பாடல்
செவிப் புலனை மறைக்க, காமம் அறிவை மயக்க, மங்கையின்
பரிமளவாசம் சுவாசத்தை நிறைக்க, மெய் சிலிர்க்க,
மதுரசம் இனிக்க, மங்கையோடு மஞ்சம் பகிர துடித்த நெஞ்சம்

அசைந்து ஆடிய நங்கை அழகனை அழைக்க
ஆடிய தோகை, அஞ்சுகமாய் உயரப் பறக்க
கோபுர உச்சியில் கோதையோடு மன்மத போதையில்
மன்னன், பக்திப் போதையோடு மாது

பங்கயப் பாதங்களில் சலங்கை கணீர் கணீ என ஒலிக்க
அங்கை தளிர்க் கரங்கள் அரங்கனை காத்திடுக என்று
அபிநயம் பிடிக்க, சேதி புரிந்த ஆசாரி, நாட்டியத்தின்
பரிபாஷை புரியாத மன்னனோ ஏமாளி

அழகிய மணவாளனைக் காத்திடுக-ஆடிய பாதங்கள்
அபிநயத்தோடு காட்டிய முத்திரைகள் கோடி அற்புதமாக,
நளினமான மொழி, நாயனமான தொனி-ஆசாரியானுக்கும்
நாட்டியக்காரருக்கும் மட்டும் புரிந்த பரதநாட்டிய மொழி

ஆட்டத்தில் மயங்கிய மன்னனைத் தொடர்ந்த படைகள்
இட்ட கட்டளையை மறந்திட, அழகிய விழிகள், ஆசானுக்கு
சேதி உரைத்திட, சந்தர்ப்பத்தைப் பயன்படுத்தி, அரங்கன் சிலையை
கடத்தி, காட்டுக்குள் மறைத்த ஆசாரியார் சாதனை






ஆசாரியும் சீடர்களும், பக்தர்களுமாய்
அரங்கனைச் சுமந்து கானகம் ஓடி ஒளிந்திட
அழகிய மணவாளனின் சிறிய சிற்பம் ஆச்சாரமாய்
அமர்ந்திட, படையினர் அறியாத பரிதாபம்

ஆண்டாளின் பாடலுக்கு ஆடிய பரதமோ கலைநயம்
விழியாள், கையாள், உயிராள், மெய்யால் காட்டிய அபிநயம்,
காதலியாய் மாறாமல் பக்தையில்லை என்ற பாவம்-
நானில்லை எல்லாம் நீயே ரங்கா என்ற தாபம்

நாதனுக்காய் ஏங்கி நங்கை பூமேனி வாட, நாதன் வரவை
எதிர்நோக்கி மைவிழிகள் தூக்கம் மறக்க, பிரிவுத் துயரில்
தவிக்கும் இதயம், பிரிந்தவனை எண்ணிப் பாடும் பூங்குயிலே
நான் படும் துயரை நாதன் அறிய நீ பாடு



வெண்சங்கேந்திய கருவண்ணன் தன் வரவை
ஊதிச் சொல்லுமுன், தன்னுருவைக் காட்டி என்னை
ஆட்கொள்ளுமுன், நினைந்து, நினைந்து
நெஞ்சம் பனிபோல் உருகுவதென்ன?




காதல் நெருப்பு உள்ளிருந்து தகிக்க துணையோடு
குயிலே உன் கூவல் என் உள்ளத்தில் காதல் தீ மூட்ட,
கானம் நிறுத்தி, அரங்கன் என்னைச் சேர, கருங்குயிலே
எனக்காய் என்னவனைக் கூவி அழைப்பாயே

பொங்கும் பாற்கடலில் ரங்கா உன் உறக்கம்
உன்னைப் புணரும் ஆசையில்
பூரித்த என் கொங்கைகளில் ஏக்கம்
உன்னைச் சேரத் துடிக்கும் என் உயிர்

கண்டும் காணாததுபோல் கருங்குயிலே
உன் உறக்கம், விழித்துக் கூவி, விடியல்
வந்ததென என்னைச் சேர, அரங்கன்
விரைந்து வர, கோகிலமே பூபாளம் பாடு



வெண்சங்கே அவன் இதழமுதைப் பருகி உன் ஓசையிலும்
இசை நயம், அவன் கரம் பற்றி உன் மேனியிலும்
மோகனம், நீ பெற்ற பெரும் பேறு யான் பெறவில்லை,
வாடி, காதலின்றித் தேயும் நிலவாய் கன்னி மனம்



நினைந்து. நினைந்து நெஞ்சம் உருக, காதல்
தீயில் வெந்து. வெந்து பசலை படர, மலர் மறந்த குழலும்
மையிழந்த விழியும், வாடுதடா, விம்மிய கொங்கைகள்
உன் மார்பை உழுதிட துடிக்குதடா கண்ணாளா

நீல நயனங்களில் நீர் வடிய, கோலமயில் மொழியில்
ஏழ்கடலின் சோகம் ஒன்றாய் ஒலிக்க-என் நாதனை
விட்டு விடு, கொடியவன் தாள் பணிந்து
கரம் கூப்பி வேண்டிய அபிநய சுந்தரி வெள்ளாயி

அஞ்சனம் எழுதிய செங்கயல் நெடுங்கண்
அரங்கன் இருந்த திசை நோக்க, கவலையில்
குங்குமம் சூடிய பிறை நுதல் வியர்வையில் தோய
விம்மிய மங்கை, குலுங்கிய சலங்கை






அரங்கனைக் காத்தோம் அபிநயமாய் சேதி
சொன்ன தோழி, பங்கய முகம் பரவசத்தில் இலயிக்க
தன்னை ஆட்கொண்ட தேவனை எண்ணி
ஆனந்தத்தில் ஆட்டத்தை தொடர்ந்த தேவி

கன்னி நெஞ்சுக்குள் இனம்புரியாத சோகம்
அரங்கனே எம்மைக் காப்பாய் என்ற தாபம்
பகை நெருங்க, மனம் நொருங்க ஆடிய பாதங்கள்
துர்க்கையாய் உருத்திர தாண்டவமாடிய கோலங்கள்

கோபுர உச்சியில் ஆனந்த தாண்டவம், அழகில்
மயங்கிய மன்னன் உள்ளத்தில் காமனின் உற்சவம்
கோபத்தின் உச்சத்தில் ருத்திர தாண்டவம், கொற்றவனைத்
தள்ளி தானும் மாண்ட மாது உள்ளத்தில் சச்சிதானந்தம்

வெண்சங்கே என் சோகத்தை கூவிச் சொல்லு
கருங்குயிலே என் தாபத்தைச் பாடிச் சொல்லு-அச்சப்புயலில்
கொளுகொம்பின்றி அல்லாடும் முல்லைக்கொடி
அரங்கனே காத்திடு அழைத்த பூங்கொடி






பாடி அழைத்தாள், விழிகளில் நீர் சேர
ஆடித் துடித்தாள், அபிநயம் காட்டித் தவித்தாள்
காதலின் உச்சத்தில் என் காதலை நீ அறிய
தன்னுயிரை மன்னன் உயிரோடு மாய்த்த கன்னி

பூ உதிர்வதுபோல் பாவம், பொன்னிறகு
மிதப்பதுபோல் மனதில் இன்பம்
மரணமல்ல மனம் நாடுவது
அரங்கன் நெஞ்சே அரிவை வேண்டுவது

ஒரு மலராய் உதிர்ந்து, இறகாய்
காற்றில் மிதந்து, இலைபோல் நடனமாடி
மண்ணை முத்தமிட்ட மங்கை உடல்

கூப்பி வணங்கிய பூங்கரங்கள் மண்ணில்
கூம்பிக் கிடந்திட, உதிர்ந்த புது மலராய்ப் பூவை-
உதட்டில் அரங்கனைக் காத்தோம் என்ற உவகை

பொன்மார்பனைச் சூடத் துடித்த பூமாலை
பூமித்தாய் மடியில் வாடாமல் கிடந்திட
கண்ட விழிகளில் கவலையின் நீர்மாலை
தன்னைச் சூடிக்கொடுத்த கன்னியோ புதிய கோதை




நெஞ்சமெல்லாம் நீயக, நினைவெல்லாம்
உனதாக, பாவம், ராகம், தாளத்தோடு ஆடும்
பரதமே நாளும் நான் நூற்ற தவம்
கண்ணாளனே உன்னைச் சேர வேண்டிய வரம்

மணிமுடி கழன்று மண்ணில் புதைய
மன்னன் மண்டை சிதறி குருதி பெருக,
வாள் ஏந்திய கரம் முறிபட்டுத் தொங்க
தர்மம் நின்று கொன்றதே உண்மை

மன்னன் மாண்டிட, ஏமாந்தோம் என குமுறிய படைகள்
ஆடிய வெறியாட்டம், கோயிலைச் சேதமாக்கி
கொள்ளையிட்ட நிதியோடு டில்லி திரும்பிய படைகள்
வெள்ளாயியை குலதெய்வமாய் கொண்டாடிய மக்கள்

மண்ணில் விழுந்த மலர்ச்சரமாய் மங்கை, தன்னுயிர்
இழந்தும் அரங்கனை அவமதித்த அரக்கனை
ஆடிப் பழி தீர்த்த நங்கையின் பெருமை
ஆனந்த தாண்டவம் ஆடிய மங்கை-ஆடிய
இறுதியாட்டமோ உருத்திர தாண்டமான மேன்மை



விழுந்து உயிரிழந்த நிலையிலும்
விமலினி காட்டிய அபிநயத்தில் துர்க்கை
அம்மனாய் தேவியை வழிபடும் மனங்களில்
ஆடழகி அம்மனின் அவதாரம் என்ற மேன்மை



காளியின் கோரத்தாண்டவம் கன்னியின் கோலத்தில்
கண்டவர் வியந்தார், மாண்டும் மங்கையின் நூதன அழகு
சிதையவில்லை, நூபுரமும், மேகலையும், கார்குழல்
மல்லிகையும் சிதறவில்லை, வண்ணக் கலிங்கம் குலையவில்லை,
காற்சலங்கை உடையவில்லை அதிசயம் என்றார்

விழி நீர் பெருக விம்மிய மக்கள், அரங்கனைக்
காத்த அற்புத பெண்மையோ காதலின் மேன்மை
ஈமச்சடங்கு முடித்து, ஈந்த இன்னுயிருக்காய்
***வெள்ளாயி கோபுரம்*** பெயர் சூட்டி அழைத்த பெருமை






அரங்கனைக் காத்திட அணங்கு விழுந்து மடிந்த
கோபுரம் வெள்ளாயிக் கோபுரமானது
கால வெள்ளத்தில் திரிபடைந்தது
***வெள்ளைக் கோபுரம்*** என்றானது

மக்கள் உள்ளங்களில் ஆறாத சோகம்-மங்கையரோ
மங்கலம் இழந்த விதவைக் கோலம்-ஆடல் அழகி
வெள்ளாயி இல்லாத கோயில் அமைதிக் கோலம்
அரங்கனோ மீண்டும் கருவறை அமர்ந்த திருக்கோலம்

திருவரங்கத்தில் அரங்கநாதசுவாமி கோவிலின் முக்கிய கோபுரம்
திருவரங்கம் கோயிலின் வெள்ளை கோபுரம் ஆகும்.
அரங்கநாதசுவாமி கோவில், இந்துக்களின் முக்கியமான இடமாகவும்
மற்றும் இந்தியாவின் மிகப்பெரிய கோவில் வளாகத்திற்காகவும் புகழ்பெற்றது.

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-12-09-2024